*Taṉavaiciya ūḻiyaṉ*
*Malar 2, itaḻ 21*
*January 27, 1922*

Record no. 148

உ

சிவமயம்

தந்திவிலாசம்—"Oolian" Regd. No. M. 1509. "Dhana Vysia Oolian


# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்றும்

வெள்ளி தோறும் வெளிவருவது.


குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் உ. காரைக்குடி துன்மதி௵ தைமீ கசஉ (உஎ—க—ககூஉஉ) இதழ் உக

## ரொட்டிப்பெட்டியும். நம்மரபினரும்.

நம்மவர்கள் பெரும்பாலாக அந்நிய நாடுகளுக்குப் போய், திரும்பி வருகையில் சென்னை, கல்கத்தா முதலியவைகளில் இறங்கி, தங்களுக்கு வேண்டிய சாமான்களை வாங்குகிறார்கள். அத்துடன் அவர்கள்; மேரி, தின்ஆரோரூட், என்றவை போன்ற ரொட்டிப் பெட்டிகளையும் வேண்டியமட்டும் வாங்கிக்கொண்டு, தங்களூர் வந்தவுடன் தங்களுடைய சுற்றத்தார்களுக்கும் நெருங்கிய சிநேகிதர்களுக்கும் ரொட்டிப்பெட்டிகளையும் கற்கண்டு முதலியவைகளையும் கொடுக்கிறார்கள். இம்மாதிரியே ஒவ்வொரு தரமும் திரும்பிவரும் பொழுது கொடுத்துவருகிறார்கள். அது நல்லது தான். ஆனால் அவர்கள் அந்நிய நாட்டுச் சரக்காகிய ரொட்டிப் பெட்டிகளைக் கொடுத்து வருவதைகாட்டிலும், நம் நாட்டிலுண்டாகக் கூடிய கற்கண்டு, பழம், நல்ல பலகார பக்ஷணங்களைக்கொடுத்து வருவது சாலச் சிறந்தது.

மஹாத்மா காந்தியடிகள் நம்மை ஊணிலும் உடையிலுமாவது அவசியம் சுதேசியமாயிருத்தல் வேண்டுமென்ற கட்டளையிடும்பொழுது, அவருடைய சட்டளையை மீறி நாம் அந்நியநாட்டுச்சாமானாகிய ரொட்டிப்பெட்டி முதலியவைகளைக் கொடுக்கலாமா? இதைச் சொல்லுமிடத்துச்சிலர், ரொட்டிப்பெட்டி கொடுப்பது வழக்கமாயிற்றே; நாமாக எப்படி வழக்கத்துக்கு விரோதமாய் திடீரென்றுவேறொன்றைக் கொடுக்கலாம் என்று கூறுகிறார்கள். வழக்கம் வழக்கம் என்றால் என்ன? இதெல்லாம் வழக்கமா, உண்பதும் உடுப்பதும் உறங்குவதும் உட்காருவதெல்லாம் ஒரு பெரிய வழக்கமா? வேண்டும்போது தாங்கள் எவ்வாறு விரும்புகின்றனரோ அவ்வாறு அவரவர் விருப்பத்திற்கு ஏற்பஇந்த வழக்கங்களை மாற்றிக் கொள்ளலாம் தாமே! அதைத்தவிர, இந்த வழக்கத்தை விட்டு அதை அநுஷ்டிக்கா விட்டால் நமக்காவது வேறு யாருக்காவது இடையூறு நேரிடுமாயின், நாம் அவ்வாறு நீக்கக் கூடாது. இதில் அவ்விதமான ஒன்றும் இல்லாதிருக்க நாம் ஏன் ரொட்டிப் பெட்டி முதலியவைகளையே திரும்பவும் வாங்கவேண்டும். ஆனதினாலே இனிமேலாவது நமது சகோதரர்கள் ரொட்டிப் பெட்டி முதலியவைகளைக் கொடுக்காமல்,நம் நாட்டிலுண்டாகக்கூடிய, நமக்கு பிரயோஜனமாகக்கூடிய, சாமான்களையே கொடுத்து வரவேண்டுமென்று மிகவும் தாழ்மையோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

வே. ராம. ஆ. சொக்கலிங்கம்.
அமராவதிபுதூர்.

## உபதேசம்

உபதேசமென்பது, உறுதியுரை எனப் பொருள்படும், இவ்வுபதேசத்தை, தனவைசியராகிய நாம் தொன்றுதொட்டுஇதுகாறும் கலாமடம், பாதரக்குடி முதலிய இடங்களில் கேட்கிறோம். ஒருசிலர் கேட்டவாறு ஒழுகுகின்றனர். மற்றுஞ் சிலர் கேட்டதை மறந்து விபூதிமட்டும் அணிகின்றனர். பிறசிலர், அத்திருநீற்றையும் தரிக்கின்றாரல்லர். இவ்வுபதேசம் பயன்றராது. ஞானாசாரியரையடைந்து உண்மையை உள்ளவாறுணர்ந்து அதன் படி நடந்தால், உடதேசத்திற்கும், அதையருளிய ஆசாரியருக்கும், நமக்கும் பெருமையுண்டாம். இவ்வுபதேசத்தில், ஞானஉணர்வும் உதிக்கும்.

உலகிலுள்ள உண்மை மகான்களெவ்வொருவரும், பற்பல்வாறு உபதேசிக்கினும் அவையாவும் முடிவில் துக்கம், துக்கநிவாரணம், துக்கோற்பத்தி, துக்கநிவாரணமார்க்கம்எனும் நான்கில் அடங்கும். அவற்றுள், துக்கமாவது:— பிறப்பினால் உண்டாவது. துக்கநிவாரணமாவது:— பிறவாமையாலுண்டாவது. துக்கோற்பத்தியாவது:—ஆசையாலுண்டாவது. துக்கநிவாரண மார்க்கமாவது:—ஆசையறுவதனாலுண்டாவது. இந்நான்கையும் முறையே, பிறந்தோர், பிறவாதோர், பற்றுடையோர் பற்றற்றோர் ஆகியநால்வரும் அடைவர். துக்கமுதலிய நான்கும் வாய்மையுளடங்கும். வாய்மை சத்தியமென்று வழங்கப்பெறும். ஆகவே, பிறப்பெடுத்த ஒவ்வொருமனிதரும், பிறப்புமுதல் இறப்புவரையில் சத்தியத்தையே மேற்கொண்டொழுகின், அப்பெருந் தகையாளருக்குவீடு கிட்டுமென்பதில் ஐயமில்லை. மேலும், அச்சத்தியமே அவருக்கு சிறந்த உபதேசமுமாகும்.

உபதேசத்தால்ஞான உணர்வெய்தி-ஞானஞ் சித்திக்கப் பெற்ற ஒவ்வொருவரும், இறைவன்றிருவடியை நாடிய மனத்தராய், அநியத்தக்கபொன்னையும், மகளிரையும், பூமியையும் விரும்பார். யான் எனும் அகப்பற்றையும், எனது எனும் புறப்பற்றையும் விடுவார். செய்கையையும், சிந்தையையும் காம வெகுளி மயக்கங்களிற் செல்லவிடாது, ஒருவழி நிறுத்துவர். உணவருந்தினாலன்றிப்பசி ஓயாது. பார்த்தாலன்றிப் பாசமாகிய ஆசை அடங்காது. அதுபோல், ஞானோபதேசம் பெற்ற அடியவர், கடவுளைக் கண்டாலன்றி மனமடங்கார்.

"உண்டவர்க்கன்றி யுட்பசியோயுமோ
கண்டவர்க்கன்றிக் காதலடங்குமோ
தொண்டருக் கெளியனென்று தோன்றுவான்
வண்டமிழ்க்கிசைவாக மதிக்கவே."

என முன்னோரும் மொழிந்தனர். ஒத்துழையாமையின் தற்காலத் தலைவராகிய மஹாத்மா காந்தியடிகள் பொதுவாக நம் நாட்டுக்கு—சிறப்பாக நம் சமூகத்துக்குச் செய்த உபதேசம் யாது? அவர் செய்த உபதேசம் பல. இங்கு நம் சமூகத்துக்கேற்ற—நம முன்னோர் கையாண்ட—மானத்தைக் காக்கின்ற நூல் நூற்றலை எடுத்துக்கொள்வோம். அடிகள், "வைசியராகிய நீங்களொவ்வொருவரும் ஒவ்வொரு குதிரைவண்டி வைத்திருப்பது போல, (நாம் தனவணிகராதலால் ஒவ்வொருவரும் குதிரைவண்டி வைத்திருப்போமெனபது... அப்பெரியார் கருத்து) உங்கள் மனை தோறும் ஒவ்வொரு

ராட்டினம் சுற்றவேண்டும்" என உபதேசித்தனர். அதைச் சிரமேற்கொண்டு நாம் வசிக்கும் ஊர்கடோறும் ராட்டினங்கள் சுழற்றப்படுகின்றன. இதுவும் ஒரு சிறந்த உபதேசமாகும். இத்தகைய உபதேசங்களை மூடர்களுக்கு உபதேசித்தலாகாது. உபதேசிக்கின், கடலுக்கோ மாங்கனியைப் பிழிந்துவிட்டாற் போலும்.

"தான் கெடினுந் தக்கார்கேடெண்ணற்க தன்னுடம்பி
னூன்கெடினு முண்ணார்கைத் துண்ணற்க—வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினு முரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல்."

எனும் நாலடியார் உபதேசப்படி நடப்பீராக.

ஞா. சே. சோமசுந்தரம்,
வேந்தன்பட்டி.

## நட்பு.

நட்போடு கூடி வாழும் வாழ்க்கையே அறிவாளர் போற்றும் வாழ்க்கையாகும். இவ்வுலகத்தில் நாம் மிகச் சொற்ப காலம் வாழப் போகின்றோம். அவ்வற்ப வாழ்க்கைக்குள் உலகிற்கு நம்மாலான நன்றியை ஆற்றிச் செல்லல் வேண்டும். உலகிற்கு நன்றிபுரிதல் தன்னந் தனியனும் முடியாது. பலர் ஒன்றுபட்டாற்றான் பெரு நன்றி புரிய முடியும். பலர் கூட்டமாகச் சேருமிடத்து ஒருவர்க்கொருவர் நட்புடையராகும். நட்புக்கு மிஞ்சியது உலகில் ஒன்றுமேயில்லை. நட்பு என்றால் வெளிக்கு சிரிப்பதுபோல் காட்டிக்கொண்டு எப்பொழுது நாக்கியடிப்போம் என்று பார்த்துக் கொண்டிருத்தல் அல்ல. நண்பனுக்கு ஆபத்து வருங் காலத்தில் தன்னுயிரையுங் கொடுத்துதவுதல் வேண்டும். "உடுக்கையிழந்தவன் கைபோல வாங்கே இடுக்கண் களைவது நட்பு" என்றார் வள்ளுவர். நண்பனிடத்து உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுதல் ஆகாது. "உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்" என்றார் இராமலிங்கசுவாமிகள். மற்றும் நண்பன் செய்யுங் காரியம் தவறாகவிருக்குமானால், நேரிற்சொல்லித்திருத்த முயல வேண்டும்; நேரில் அவன் செய்த தவறை எடுத்துணர்த்தாது, அவன் மனத்திற்கியையப் பேசிவிட்டுக் காணாதவிடத்தில் கேலிசெய்வது கயமைக் குணமுடையார் செயலாகும். "நகுதற் பொருட்டன்று நட்டல் மேற்சென்றிடித்தற் பொருட்டு" என்றார் தேவர். நண்பனைக் காணாதவிடத்திற் புகழவேண்டுமே தவிர கண்ட விடத்தில் அவன் மகிழப் பேசுதல் உபயோகமில்லாத காரியம். "நேசனைக்காணாவிடத்து நெஞ்சார வேதுதித்தல்" என்றார் முன்னோர். நட்புக்கொள்ளும் போதே குணஞ் செயல் முதலியவற்றை நன்றாக ஆராய்ந்து கொள்ளுதல் வேண்டும். நட்புக் கொண்ட பிறகு அவனைப்பற்றி ஆராய்தல் அவ்வளவு சிறப்புடைத்தன்று. 'எண்ணித்துணிக கருமம் துணிந்தபின் எண்ணுவ மென்பதிழுக்கு" என்றார் ஆன்றோர் நாயனர். கொண்ட நட்பு ஆயுள் வரை நீடித்திருக்க நட்டாசிருவர் முயலவேண்டுவதே கடமை. ஆனல் ஒவ்வாதிருந்து கொள்கையில் மாறுபட்டு நட்புக் கொள்ளும் பொழுது இருந்த நிலையில் இல்லாது தாழ்ந்த நிலையை ஒருவர் அடைந்துவிடுவாரானல், பிறகு அந்த நட்பு நீடித்திருத்தல் துர்லபம். இருவரும் ஒருதன்மையினராய் இருந்தாற்றானே நட்பு வளரும். ஒருவர்க்கொருவர் கொள்கையில், தன்மையில், குணத்தில், செயலில், மாறுபடும்பொழுது நட்புத்தானே ஓடிவிடும். நட்புக்கொள்ளுதல் மிகவும் பெரியகாரியமாதலால், சிறு சிறுகாரியங்கட்காக நட்பை ஒழித்தல் ஆகாது. அதனைத்திருத்தவே முயலவேண்டும். பெரிய விஷயங்களில் அபிப்பிராயபேத முண்டானலும், நட்புஅவ்வளவாகமேலும்மேலும் வளராது எனினும்உள்ளநட்புஏதோஒருவாறாகஇருக்கலாம். கண்டோர்அருவருக்கத்தக்க குணமும் செயலும் ஒருவர் படைத்து விடுவாராயின் அவர் நட்பை இம்மியுந் தாழாது நீக்கி விடுதல் வேண்டும். இல்லாது போனல் அவர் குணஞ்செயலேயேஇவரடைய நேரும். ஆகலான் இவரேனும் நல்வழிப்படுதல் உத்தமமன்றோ? யான் இதுகாறும் கூறியவை:—நட்போடுகூடிவாழும்வாழ்க்கையேசிறந்த வாழ்க்கையென்பதும், பலர் நட்புக்கொண்டாலன்றி உலகிற்குப் பேருதவிசெய்தல் அரிதென்பதும், நண்பன் குற்றஞ் செய்துழிப்புறஞ்சொல்லாது நேரே சொல்லித்திருத்தவேண்டுவதவசிய மென்பதும், நட்புக்கொள்ளும்போதே ஆராய்ச்சி செய்து கொள்ளவேண்டுமென்பதும், கொண்டுவிடில் பிறகு நட்புநீடித்திருக்கவே முயலவேண்டுமென்பதும், நண்பன் தாழ்ந்ததுறையிலிறங்கி, நல்வழிப்படுத்தவும் இணங்கானெனின் நீக்கிவிடுதல் வேண்டுமென்பதும் பிறவுமாம்.

நல்லோர் நண்பன்.

## இரணியூர்க் கோயில் நகரத்தார்க்கு ஓர் வேண்டுகோள்.

சிவபக்தியிற்சிறந்த செல்வர்காள்! நம் சமூகத்தவர் போற்றும்சிவாலயங்கள் ஒன்பதில் ஒன்றாகிய இரணியூர்க்கோயில் முற்காலத்தில் விஷ்ணுமூர்த்தியானவர் தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கியும் பிரகலாதாழ்வாரின் பக்தி விசேஷத்தை உலகத்தவர்க்கு அறிவிக்கும் பொருட்டும் நரசிம்மாவதாரமாகி இரணிய சம்ஹாரம் செய்தபிறகு இரணியன் துஷ்டனயிருந்த போதிலும் காசிபமகரிஷியினுடைய புத்திரனகையால் அத்தோஷம் நீங்கும் பொருட்டும் சிவனேதியானிக்கப்படுபவன் என்ற வேதவாக்கை இம்பர்க்குமும்பர்க்கும் இனிதுணர்த்தும் பொருட்டும் இப்புனித பூமியாகிய இரணியூரின் கண் எல்லாம் வல்லமுழுமுதற்கடவுளாகிய பரமேஸ்வரனை சிவலிங்கத்தாபனஞ்செய்து நரசிம்மேஸ்வரர் என்ற திருநாமமிட்டு சைவாகமவிதிப்படி பூஜைசெய்து பேறடைந்த புண்ணியஸ்தலமாகும். இதை இரணியூர், நரசிம்மேஸ்வரர் என்கின்ற இருபெயர்களே உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நன்குவிளக்குகின்றது. இது நிற்க இவ்வளவு மகிமைவாய்ந்த இப்புண்ணியஸ்தலத்தைச்சிறப்பாக நம் வகுப்பினர் வழிபடும் பாக்கியம் பெற்றுள்ளதே; ஆகையால் இப்பழம் பதியாகிய பரமேஸ்வரன் வீற்றிருக்கும் திருப்பதியை சைவாகமவிதிப்படி "புதிதினேர் சிவாலயஞ் செய் புண்ணிய பலனிற்கோடி, யதிகமாம் புராதனத்தினைப் பழுதறத்திருத்து, மிதம்" என்ற சற்குருவாக்கின் சாரத்தை உணர்ந்து அஷ்ட ஐஸ்வரிய சம்பன்னராகிய நம் இரணியூர்க்கோயில் நகரத்தார்களனைவரும் கூடியசீக்கிரம் கூட்டம்கூடி ஆண்டவனருளுக்கடங்கி இப்பொழுதிருக்கும் மிகச்சிதிலமுள்ள திருப்பணியினின்றும் சுவாமியை வாலஸ்தாபனம் செய்தாவது அல்லது கிளிக்கூடு முதலிய கட்டியாவது திருப்பணியைப்புதுப்பணியாக்கி மகா கும்பாபிஷேகமும் செய்து நித்திய நைமித்திக பூஜைகளும் மிகச்சிறப்பாக நடாத்திச் சிவபுரம் தேவி சமேத ஆட்கொண்ட நாதரென்கின்ற நரசிம்மேஸ்வரர் பொன்மலர்த்தாளை மும்மையுமிறைஞ்சியுறத்துதித்து உன்னிவாழவேண்டுமென்று மிக மிக வணக்கமாகக் கேட்டுக்கொள்கிறேன்.

சேவு. மே. மெய்யப்பன்,
காரைக்குடி.

## பொறுமை வேண்டும்.

மணமுடியாத வாலிபசகோதரர்களே! நமக்குப்பொறுமை மிகுதியும் வேண்டிய தவசியமல்லவா.

நம் ஜாதியில் பெண்ணுக்குப்பெருந்தொகைகொடுத்துப்பெண் எடுத்து வந்ததை ஊழியர் சங்கத்தார் பெரும் பிரயாசையெடுத்து ஈமது மகாநாட்டைக்கூட்டுவித்து மரகத விநாயகர் திருவருளால் பெண்ணுக்குத்தொகை கொடுப்பது என்பதைஅறவேஒழித்துசெலவுக்காகரூபாய் ஐயாயிரம் கொடுக்கலாமென்ற தீர்மானமாகியும் இன்னும் விவாகங்கள் சவ்விசாக நடைபெறவில்லையே என்று நினைத்து, நம்மைப் பெற்றோர்கள், எவ்விதமும் நமக்கு விவாகத்தை முடித்து விடவேணுமென்றெண்ணிப் பொறுமையில்லாது பொருள் கொடுத்தாவது விவாகத்தை நடாத்தி விடலாமென்றெண்ணுவார்கள். நாம் தாம் பொறுமையுடனிருந்து அதற்கிடங்கொடாமல் பொருள் கொடுத்துப் பெண் எடுப்பதில்லையென்ற உறுதியைக்கைக் கொள்ளவேண்டும் அப்படியிருப்பின் சமீபத்தில் கூடும் மகாநாட்டில் ஐயாயிரம் ஏழாயிரமாகாதா பத்தாயிரமாகாதாவென்று, எண்ணிக்கொண்டிருக்கிற பேர்வழிகளுக்குத் தற்சமயம் செலவுக்காகக் கிடைக்கும் ஐயாயிரம் ரூபாய்கூட கிடைப்பதரிதாகிவிடும்.

௨௦௦௦ வாலிபர்கள் மணமுடியாதிருப்பதாகத் தெரிகிறது. அதில்யானுமொருவனுவேன். அன்பிற் சிறந்த சகோதரர்களே! நம்மைப் பெற்றோர்கள் தங்கள் கடமையை நிறைவேற்றவேண்டிப் பொருள் தந்து விவாகத்தைமுடிக்க எண்ணினும் நியாய விரோதத்திற்கு நாம் சம்மதிக்கக்கூடாதல்லவா? நமக்கு இவ்வருட மகாநாடுகூடுவதில் சரியான நியாயம் கிடைக்குமென்பதில் ஐயமுண்டோ? இல்லை. அப்பால், ஐயாயிரம் ஏழாயிரமாகாதா பத்தாயிரமாகாதா என்று நினைத்தவர்கள் பெண்ணை வைத்துக்கொண்டு என்செய்வார்கள். நாம் ஒருவர்க்கொருவர் போட்டிபோட்டுக் கொண்டு முந்தாமல் யாவரும் பொன் கொடுத்துப் பெண் எடுக்காமல் பொறுமையோடிருப்போமானல் பெண்களைப் பெற்றோர்கள் எத்தனை நாட்களுக்குத்தான் விவாகத்தை முடிக்காமல்வைத்திருப்பார்கள். பெருந்தொகையாகவிருந்து தற்பொழுது சிறு தொகையாக விருப்பதனல் அன்னவர்களுக்குச் செய்ய மனமில்லாதிருக்கிறது. இனியும் நாம் அந்தத்தொகையும் கொடுப்பதில்லையென்று வைத்துவிடுவோமானல் பெண்ணைப் பெற்றவர்கள் விவாகம் நடத்தாமல் எத்தனை வருஷங்கள் வரையில்தான் வைத்திருப்பார்கள் பார்ப்போம். நாம் பொறுமையோடு மாத்திரமிருந்தால் நம்மைக் கெஞ்சிக் கெஞ்சிப் பெண்தரப் போகிறகாலம் வரும். என தருமைச் சகோதரர்களே! பதறுதீர்கள்!! பதறுதீர்கள்!!! நாம் பொறுமையோடு மட்டுமிருந்து வரும் செய்தி பெண்ணைப் பெற்றவர்களுக்குத் தெரிந்துவிடுமாயின் தாமதமின்றிப்பெண்களுக்கு விவாகத்தை முடித்துவிட முன்வருவார்கள். எல்லாம் நம்முடைய கையிற்றான் இருக்கிறது. கொடுப்பதுபாபம் என்பதை அறிந்தும் கொடுப்போமானல் நம்மைக்காட்டினும் அறிவிலிகள் உலகில் வேறு கிடையாதல்லவா? நிச்சயமாக இம்மையில் பணங் கொடுக்கச் சிரப்படுவதோடல்லாமல் மறுமையினும் நரகிற்காளாக ஒருவரும் சம்மதிக்க மாட்டீர்களென்று நம்புகிறேன்.

மணமுடியாத ஓர் வாலிபன்.

## கண் கெடுவதற்குக் காரணம்.

(சென்னை வி. ஆர். சுந்தரம் எழுதுவது.)

ஒரு மனிதன் கண் பார்வை கெடாமலும் பற்கள் விழாமலும் ஜீவித்திருந்தால், அவனை பிறந்த புண்ணியனென்று சொல்வார்கள். இக்காலத்தில் பெரும் பான்மையார்க்கு ௨௦, ௩௦ வயதிலேயே பார்வை மங்கிக்கண்ணாடி உபயோகிக்கும்படி நேரிடுகிறது. இன்னுஞ் சிலநாள் போனல் கண்ணே தெரியாமற்போய் விடும் போலும். ஆகையினல் கண்ணுக்குத் தீங்குதரும்படியானவை எவையென்று கவனிக்க வேண்டியதும் அவற்றைத் தடுத்துக் கொள்ள வேண்டியதும் அறிஞர் கடனாகுமாதலால், இதை எழுதுகிறேன்.

இதனை வாசிக்கும் நேயர்கள் கவனித்துத் தங்களிடம் அப்படிப்பட்ட குறை ஏதேனுமிருந்தால் அதை உடனே விட்டுவிட வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கின்றேன்.

பாரே பொடிச்சுடல் பாறுவெயில் மேற்படல்
வாரேறு கொங்கையார் மையை மிகச்செய்யல்
காரேமுழுக்கறல்கண்ணால் கனல் பார்த்தல்
சீரேறு பாஷாணம் தின்றதாற் கண்ணேயே.

என்று பதினெண் சித்தர்களுள் ஒருவராயும் சைவசிரோன்மணியாயும் விளங்கியதிருமூலநாயனர் திருவாய் மலர்ந்தருளியுள்ளார்.

கடும் வெயிலில் பாதத்தில் மிதியடியின்றிப் பாதம் சுடும்படி நடத்தல், மாதர்களின்மேல் மோகங்கொண்டு கலவி அளவுக்கு மிஞ்சிச்செய்தல், எண்ணெய் முழுக்குத் தவறுதல், அக்கினியைச் சதாகாலமும் உற்றுநோக்குதல், பாஷாணங்களைத் தின்றல், இவைகளால் பார்வை குறையுமென்று காரணங் கூறியிருக்கின்றார்.

முக்கியமாய் மேகரோகங்களுக்காதாரமானஇவற்றினல் கண்ணுக்குப் பார்வைக் குறை வேற்படுமென்பது அநுபவமுடையார் நன்குணர்வார். இவையன்றி மலசலமடக்குதல், ரசகந்திபாஷாணங்களின் புகை மேற்படல், வெளிச்சங் குறைந்த நேரங்களிலே வாசித்தல், பிரகாசமாயும் வெண்மையாயுமுள்ள வஸ்துக்களை ஊன்றிப் பார்த்தல் (சூரியன் கோப்பை போன்றவை) மழையிலே நனைதல், படுத்துக்கொண்டே வாசித்தல், லாகிரி வஸ்துக்களை உபயோகித்தல், முதனளிற் சமைத்த பதார்த்தங்கள் ஜீரணமாகாத பதார்த்தங்கள் இவற்றை அளவு கடந்துண்டல், வயிற்றின்மீது பாரத்தைப் போட்டுக்கொண்டும் கவிழ்ந்து கொண்டும் நித்திரை செய்தல் சமைக்காத பச்சைக்காய்கறிகளைத் தின்றல், புளிப்பு வஸ்துக்களையும், மிளகாய் எண்ணெய் இவை சம்பந்தமான வஸ்துக்களையும் அதிகமாய்த் தின்றல், எட்டு மணிக்கு அதிகமாயும் ஆறு மணிக்குக் குறைவாகவும் நித்திரை செய்தல், வெளிச்சத்திலிருந்து இருட்டிலும் இருட்டிலிருந்து வெளிச்சத்திலும் திடீரென்று செல்லுதல், அவசியமில்லாமல் அழகிற்காகக் கண்ணாடி உபயோகித்தல், களைத்திருக்கும்போது வாசித்தல், ஒரு வஸ்துவை அதிக நேரம் ஊன்றிப்பார்த்தல், தும்பு தூசி பறக்கும் இடங்களிற் போதல், புகையை அதிகமாய்உபயோகித்தல், அடிக்கடி மாதம் ஒரு முறை இருமுறை பேதிக்குச்சாப்பிடுதல், மிகப்பொடியான எழுத்துக்களை அடிக்கடி வாசித்தல், சிரசிலும் கண்களிலும் அடிபடும்படியான செய்கை செய்தல், உள்ளங்காலில் உஷ்ணமான ஒத்தடம் அல்லது பத்திடல், ஆகிய இவற்றாலும் நேத்திரங்களுக்குக் கெடுதி விளையும்.

அடுத்த முறை கண்ணுக்குப்பிரகாசந்தரும் முறைகளை எழுதுவோம்.

## நோட்டீஸ்.

இஷ்யூஸ் திட்டம் செய்வதற்கான ஸம்மன்.

(சிவில் புரோஸீஜர் கோடு ஆர்டர் 5ரூல்கள் 1, 5 படி).

(மோல்மேன் ஆம்ஹர்ஸ்ட் டிஸ்திரிக்கட்டு கோர்ட்டு சிவில் அசல் இலாக்கா)

1921-ஷ்த்தின் சிவில்வியாஜ்ய நெ.89

பவர்பெற்ற ஏஜண்டு சுப்பிரமணியன் செட்டியார் மூலமாக பி. எ. எல். சின்னையாசெட்டியார் } வாதி

சுப்பம்மாளும் இன்னொருவரும் } பிரதிவாதிகள்.

இராமனதபுரம் ஜில்லா அரியக்குடியிலிருக்கும் இரண்டாம் பிரதிவாதி எஸ். கே. டி. கதிரேசன் செட்டியாருக்குத் தெரிவிக்கிறதாவது:—

ஷை வியாஜ்யம் முதல் பிரதிவாதியால் வாதிக்கு எழுதிக்கொடுக்கப்பட்ட இரண்டு பிராமிசரி நோட்டின் தொகையைத் தாங்கள் கொடுப்பதாய் ஒப்புக்கொண்ட வகையில், வாதிக்குச் சேரவேண்டிய ரூ.767—0—0 கிடைக்கவேண்டுமென்று ஷை வாதி இக்கோர்ட்டில் தாவா தொடர்ந்திருக்கிறபடியால் நீங்கள் இக்கோர்ட்டு முன்னேரே ஆஜராகும்படி இதன்மூலமாய் ஸம்மன் செய்திருக்கின்றது. அல்லது உங்கள்ளர்வ அதிகாரம்பெற்றஏஜண்டுமூலமாவது அல்லது இக்கோர்ட்டுவக்கீல்அல்லது பிளீடர் மூலமாவது சகல சங்கதிகளையும் வக்கீல் அல்லது பிளீடருக்கு அறிக்கை செய்வித்து இவ்வியாஜ்ய சம்மந்தமான சகலகேள்விகட்கும் பதில் கொடுக்கும்படியாகவும் அல்லது ஷை நடவடிக்கைகளை நன்றாய் விடையளிக்கும்படியான ஆள் மூலமாவது 1922-ஷ் பிப்ரவரிµ 13௳ திங்கட்கிழமை முற்பகல் 11-மணிக்குள் இக்கோர்ட்டு முன் ஆஜராகவேண்டியது. தவறினல் ஷை வியாஜ்யத்தைஉம்மையன்னியில் விசாரணை செய்து பைசல் செய்யப்படும்.

1922-ஷ் ஜனவரிµ 13௳ என்னுடைய கையெழுத்தும் கோர்ட்டு முத்திரையும் போடலாயிற்று.

P.W. Trutwein Esq.,
டிஸ்திரிக்ட்டு ஜட்ஜ்.

## திருக்கோஷ்டியூர்.

இந்த ஸ்தல மகிமை எழுத முடியாது. பல நூறு வருஷங்களாகப் பாம்பணைப் பரம்பொருள் சாந்நித்தியமாக விளங்கி வருவதும் பிரத்யக்ஷம். இது சிவகெங்கை ஜமீனைச் சேர்ந்தது, அவர்கள் பரிபாலித்து வந்தும், அநேகர் அநேக குறைபாடுகளைச் சொல்லுகின்றார்கள். பகலிலும் இராத்திரிகாலத்தும் தேசாந்திரிகளுக்குப் பிரஸாதம் விநியோகமாகிறது, நெடுங்கால வழக்கம். தற்போதுள்ள நிலை பரிதாபகரமாக இருக்கிறதென்று எழுதாமல் விட எவருக்கும் முடியாது. அதாவது:— சிரஸ்தார் (மணியக்காரர்) என்ற பற்பல உத்தியோகஸ்தர்கள் இருக்கிறார்கள். தேசாந்திரிகள் இவர்களைத் தேடிக் காணமுடியாது போய்விடுகிறது ஒருவாறு கண்டு துண்டு வாங்கினாலும் கோயிலுக்கு வந்து கொடுக்குமுன் பிரஸாதம் வெளியே பிரயாணமாய் விடும். பிராமணர்களுக்குஞ் சரி ஏனையோர்க்குஞ்சரி சிரஸ்தார் கோயில்வந்திருந்து துண்டு கொடுத்துதவவும் ஏனைய ஸ்தலங்களிற்போல தரிசனம் பிரஸாதம் முதலியன ஏழைகளுக்கு நன்கு கிடைக்கவும் கோவிலை மேற்பார்க்கும் அதிகாரிகள் அல்லது ஜமீன்தாரவர்கள் கடைக் கணிக்க வேண்டுமென்பதை மட்டும் நான் குறிப்பிடுகின்றேன்.

ஒரு தேசாந்திரி.



# இளைஞர் பகுதி.

## செய்கை வேண்டும்.

அருமைச் சகோதரர்களே!

ஒவ்வொரு காரியத்தையும் நாம் செய்கையிற்காட்ட முற்படல் வேண்டும். செய்கையன்றிய பேச்சும் எழுத்தும் பிரசங்கங்களும் ஒரு சிறிதும் பயன் தரா. நாம் எதைச் சொன்னாலும், எதை எழுதினாலும், எதைப் பிரசங்கித்தாலும், முதலில் நாம் அதைச் செய்கின்றோமா என்பதை யோஜித்துக்கொள்ளல் வேண்டும். யோஜித்து நாம் செய்த பிறகே மற்றவர்களுக்குப்போதித்தல் வேண்டும். அங்ஙனமின்றி நாம் செய்வதொன்று பிறருக்குப் போதிப்பதொன்றாக விருக்குமானால் நம்மை உலகம் கைகொட்டி நகைக்கும். சொல்லுவது மிக இலேசாகச் சொல்லி விடலாம். செய்யும் பொழுதல்லவா தெரியும். "சொல்லுதல் யார்க்கும் எளிது அரியவாஞ் சொல்லிய வண்ணஞ் செயல்" என்று நமது நாயனார் எவ்வளவு அளந்து கூறியிருக்கின்றார். பிறருக்குச் சொல்லிவிட்டுத் தாஞ் செய்யாத மனிதர்கள் உலகில் அடிக்கடி தோன்றுவார்களென்று கருதியே நமது வள்ளுவர் அங்ஙனம் மொழிந்தனரென்பதை நாம் அநுபவத்திற் காண்கின்றோம். இப்பொழுது தேச விஷயத்தை யெடுத்துக் கொள்வோம். தேசத்திற்கு உழைப்பதற்காகவே தாங்கள் பிறந்ததாக எங்கும் பறைசாற்றித் திரிந்தவர் பலர், சொல்லளவில் நின்று, தங்கட்கு ஒரு சிரமுமில்லாது ஜனங்கள் தேசாபிமானிகள் தேசாபிமானிகள் என்று மதித்து ஊர்வலம் மாலையிட்டு ஆரவாரஞ் செய்ததை யெல்லாம் சந்தோஷமாக ஏற்றுக்கொண்டு இறுதியில் செய்கையிற் காட்ட வேண்டிய சந்தர்ப்பம் வந்தவுடன் இருக்குமிடம் தெரியாமல் மூலையிற் பதுங்க ஆரம்பித்து விட்டனர். அதுபோலவே ஒவ்வொன்றிலும் வெறும்பேச்சில் ஒருபிரயோஜனமுமில்லை; வெளியிலுள்ள ஜனங்கள் பிரமாதமாக வெண்ணும்படி பேனாக் கையிலிருக்கிறதென்று வந்ததெல்லாம் எழுதி விடுவதில் யாதொரு பயனும் விளையாது. "வீண் ஆடம்பரங்கள் வேண்டாம்; செய்கையே வேண்டும்" என நமது மகாத்மா சொல்வது கவனிக்கத்தக்கதாகும். அப்படி வீண் டகழுக்காக—தங்கள் பெயரைப் பொது ஜனங்களிடை விளம்பரஞ் செய்வதற்காக—எவ்வளவோ சாகஸமெல்லாம் செய்த பலர் ஜனங்களாற் கண்டு பிடிக்கப்பட்டு அவமானமடைந்ததை நாம் கண் கூடாகக் காண்கின்றோமல்லவா? அத்தகைய தீய செய்கைகளை நாம் கனவிலும் கருத வேண்டாம்! நமக்கு வீண் ஆடம்பரங்கள் வேண்டாம்! ஆரவாரங்கள் வேண்டாம்!! நம்மை மற்றவர் புகழ வேண்டாம்!!! நமது பெயரை விளம்பரப்படுத்த நாம் முந்தவேண்டாம்!!!! நம்மை யார் வேண்டுமானாலும் புகழட்டும்; யார் வேண்டுமானாலும் இகழட்டும். நமது காரியத்தை லவலேசமும் விடாது நாம் செய்தல் வேண்டும். செய்கையிற் காட்டல் வேண்டும். யாது நேரினும் ஏற்றுக் கொள்தற்கு நாம் ஒவ்வொருவரும் தயாராக விருத்தல் வேண்டும். எதிர்ப்பட்டவரை முன்னே விட்டு விட்டு யாதுபற்றியும் நாம் பின்வாங்குதல் ஆகாது. வேஷதாரிகளுடைய உறவே நமக்கு வேண்டாம். "நெஞ்சிற் றுறவார் துறந்தார் போல் வஞ்சித்து வாழ்வாரின் வன்கணாரில்" என்றபடி உள்ளே ஒரு பற்றையும் விடாது வெளிக்கு வேதாந்தம் பேசுவோர் மகா கொடியர்களாதலின், உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று செய்யும் அன்னார் உறவை அடியோடு அகற்றி விடல் வேண்டும். அத்தகைய கயவர்கள் முகத்தில் விழித்தலும் பாபமன்றோ? நமது சமூகத்திற்கு—நமது தேசத்திற்குச்செய்கையில் ஊழியஞ் செய்யும் நல்லோர்களையே நாம் விரும்புவோம். வாலிபர்களாகிய நாம் செய்கையிற் காட்டுதற்கு இதைத் தவிர வேறொருசந்தர்ப்பத்தை எதிர்பார்த்தல் முடியாது. இந்த சமயத்தில் எவ்வளவு பெரிய வேலையாக விருந்தபோதிலும் அதை நாம் நிறுத்திவைத்துக் கொள்ளவே வேண்டும். இப்பொழுது ஜாதீய விஷயத்தில் மிக உஷாராக வேலைசெய்வோமானால், பல்லாண்டுகள் உழைத்து அடையும் பெரும்பயனையடையலாம். இதுவரைச் செய்த வேலை, இனிச்செய்யும் வேலையாற்றான் உயிர் பெற்று மிளிரவேண்டும். இப்பொழுதுசோர்ந்து விடுவோமானால், இதுவரைச் செய்தயாவும் விழலுக்கிரைத்த நீராகிவிடும். எவ்வளவோ பிரயாசையோடு அறுபதுவருடங்கட்கு முன்னேகூடிய தொண்ணூற்றாறூர்க்கூட்டம் கூடியது. தீர்மானமும் செய்தது. தீர்மானஞ்செய்து ஆறு மாதங்கட்கு அதிகமாக ஆயின. இதுவரைத் தீர்மானத்தை யாரும் மீறவில்லை. இப்பொழுது மீறப்போவதாக ஆங்காங்கு வதந்திகள் உலாவுகின்றன. இப்பொழுது அப்படியொன்று நடக்கவிட்டு விட்டோமானால் பிற்காலத்திய சமூக நிலை யென்னாகுமென்பதை நாம் சொல்ல வேண்டுவதில்லை. முன்னிருந்த நிலைக்கு அதிகப்படுமே தவிர ஒரு சிறிதும் குறையுமோ? அப்படி விட்டுவிடுதல் சமூகாபிமான முள்ள நமக்கு அழகோ? தொண்ணூற்றாறூர்க் கூட்டத் தீர்மானத்தை எந்தெந்த வகையில் நம்மால் நிலைநாட்ட முடியுமோ அந்தந்தவகையால் உடனே செய்யஆரம்பித்தல் வேண்டும். நாம் சமூகத் தொண்டில் இறங்கி விட்டோம். "பொதுஜன ஊழியத்திற்காகவே மக்கள் உலகில் படைக்கப்படுவது" என்பதை அறிந்து விட்டோம். இனிப் பின்னடைதல் ஆகாது. தம்முயிரையும் பொருட்படுத்தாது யுத்தத்திலே முன்னணியில் நின்று வேலைசெய்வோன் எப்படி எதிரியின் அம்புக்கு ஒரு சிறிதும் அஞ்சமாட்டானோ, அதுபோல, பொதுஜன ஊழியத்திற்றலைப்பட்ட நாம் மற்றவர் வசைமொழிகட்கு அஞ்சுதல் ஆகாது. கடவுள் நம்பக்க மிருக்கிறார். அதில் நாம் சந்தேகிக்கத் தேவையில்லை. ஏன்? நியாயக்கட்சியிற்றானே கடவுளிருப்பார். "குடிசெய்வலென்னும் ஒருவற்குத் தெய்வம் மடிதற்றுத் தான்முந்துறும்" என்றவேதவாக்கியத்தைப்பண்ணுட்கட்கு முன்பே நாம் உறுதியாகக் கொண்டு விட்டோமல்லவா? கௌரவத்தைப்பார்த்துக் கொண்டு நாம் வீட்டில் குந்திக் கொண்டிருத்தல் ஆகாது. செய்யுங் காரியத்தை ஒல்லும் வகையான் நிறைவேற்றமுயலல் வேண்டும். இனி நாம் இராப்பகலாக உறங்குதல் ஆகாது. கருமத்திலேயே கண்ணாக விருத்தல் வேண்டும். "குடிசெய்வார்க்கில்லைப்பருவம் மடி செய்து மானங்கருதக் கெடும்" என்ற வள்ளுவர் திருமொழியைமறத்தலாகாது. நாட்டுக்கோட்டைச் சமூகத்திலே ஆண் மக்களாகப் பிறந்த நமக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் தொண்ணூற்றாறூர்க் கூட்டத் தீர்மானத்தை நிலைநாட்டுவதைத் தவிர வேறு கடமைகிடையாது. பிறயாவும் பின்னே கவனிக்கவேண்டிய காரியம். நாம் ஆண்களல்லரா? கேவலம் ஆண் சரீரமொன்றைத் தாங்கியிருத்தல்மட்டும் அமையுமோ? அதற்குரிய செய்கையன்றோ செய்ய இம்மியுந்தாழாது முந்தல்வேண்டும். "நல்லாண்மை யென்பதொருவற்குத் தான் பிறந்த இல்லாண்மையாக்கிக் கொளல்" என்பது சத்திய மொழி. மறுமுறையுங் கூறுகிறோம். வெளிவேஷம் வேண்டாம்! ஆடம்பரங்கள் வேண்டாம்!! ஆரவாரம்வேண்டாம்!!! செய்கையே வேண்டும்!!!!

நாளென்செயும்! வினைதானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
றென்செயும்! குமரேச ரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி தைமூ கசஉ

## நடுவு நிலைமை.

நடுவு நிலைமை யென்ற இவ்வரிய சொற்றொடரையே நமது முன்னோர்கள், பொன்னேபோற் போற்றி வந்தனர். அதனாலேயே அடைதற்கரிய புகழையடைந்து மேம்பட்டு வாழ்ந்தனர். "துலைநாவன்ன சமநிலை' என்பதை முற்காலத்திய நமது சமூகத்தினிடத்திற் பரக்கக் காணலாம்; அதனாலேயே பிறரை யெதிர்பாராது, தங்கட்குள்ளேற்படும் எத்தகைய வழக்குகளையும் தாங்களே ஒழித்துவர முடிந்தது. எவ்வளவோ பெரிய பெரிய வழக்குகளையெல்லாம் ஒழுங்காக, இருதரப்பாரும் மகிழும்படி, உண்மை யெப்படியோ அப்படியே தீர்த்துவிட்டிருக்கிறார்கள். செல்வர்க்காகவும் வறியர்க்காகவும், செல்வாக்குடையார்க்காகவும் அல்லாதார்க்காகவும், காரியக்காரருக்காகவும் அவரல்லாதார்க்காகவும், சொந்தக்காரருக்காகவும் மற்றவர்க்காகவும் தனித்தனியான நியாயம் கிடையாது. யாவராகினும் நியாயம் நியாயமே. தீச்செயல் புரிவோருடைய பணங்கருதி அவரைத்தண்டியாது விடுதல் அக்காலத்திலில்லை. இவர்களாற்றீர்க்க முடியாமல் மற்றொருவரைக்கொண்டு தீர்க்கச்சொன்ன ஒருவழக்குமில்லை. அக்கிரமத்தைக் கனவினும் கருதாத புண்ணியர்களேயே காரியக்காரர்களாகவும், நியாயாதிபதிகளாகவும், உயர்ந்தமக்களாகவும் தரமுள்ளவர்களாகவும் கொள்ளப்பட்டன. இந்நறுங்குணங்கட்கு மாறுபடுவோரை மக்களாகவும் கருதப்படவில்லை. நமது சமூகத்தார் செய்யும் நியாயம் நடுவு நிலைமையில் எள்ளளவும் பிசகாதது. ஆதலால் அன்னார் செய்யும் நியாயத்தை வழக்காளிகளிருவரும் சிரமேல்தாங்கினர். பொது ஜனங்களும் ஒரு சில நல்ல மக்களைத் தலைமையாக வைத்துக்கொண்டு அவர்கட்குக் கட்டுப்பட்டே நடந்துவந்தனர். எல்லோரும் நியாய நெறி நின்று நடந்துவந்தமையால், ஒருவரும் ஒருசிறுதவறுகூடச் செய்ய முற்படுவதில்லை. சமூகம் வளர்பிறைபோல நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டேவந்தது. சுருங்கச்சொல்லுமிடத்து நமது சமூகம் உன்னத நிலையடைந்ததற்குக்காரணம்:—நடுவு நிலையில் எள்ளளவும் பிசகாமையேயாகும். நெற்றிக்கண்ணைக்காட்டிய கடவுளைக்கண்டும், குற்றங் குற்றந்தானென அஞ்சாது மொழிந்த நக்கீரன்போன்ற அஞ்சா நெஞ்சு படைத்தோர் பலரிருந்தனர் நம் சமூகத்திற் பண்டை நாளில். கன்றைக்கொன்ற காதல் மகனைத் தேர்க்காலிலே கிடத்தி ஆருயிர் கவர்ந்த மநுநீதிகண்ட சோழன் போன்ற உத்தமரும் நமது சமூகத்தில் இருந்திருக்கிறார்கள். முற்காலத்தில் நியாயத்திற்கு எதையும் செய்யத்துணிந்திருக்கிறார்கள் என்பதை நமது சரித்திர முகத்தா னறிகிறோம். தாம் வருந்திப்பெற்ற ஓர் பெண்ணைப்பெற்றோர்களும் சம்மதித்துச்சிரச்சேதம் செய்தார்கள், மானத்தைக்காப்பாற்றும் பொருட்டு-நியாய விரோதமென்று தங்கட்குப் பட்டதனாலே. ஒருகாரியத்தின்பொருட்டுச் சமூகத்தார் அனைவரும் பள்ளிக்குச்சென்ற பிள்ளைகள்மீளுமுன் மாண்டொழிந்தனர். சிறுசிறுகாரியங்கட்கெல்லாம்செயற்கரிய செயல்செய்த நமதுமுன்னோர்கள், இப்பொழுது நடக்கும் சொல்லுதற்கரிய—எழுதுதற்கரிய—நினைத்தற் குமரியகயமைச் செயல்களைக்கண்டால் என்னசெய்வார்கள்! வாசகர்களே தீர்மானித்துக்கொள்ளலாம். இவ்வளவு பெருமைபடைத்த மேலோர்கள் சந்ததியில் நாம் பிறக்கவில்லையா? அவர்களின் நடுவு நிலைமையாலல்லவா, இந்நாளில் நினைத்தற்கரிய தீவினைகள் பலவற்றிற்கு உறைவிடமாகவிருந்தும், சமூகப் பெருமை இலைமறைகாய் போலாவது இருந்துகொண்டிருக்கிறது. "தந்தைகட் டோன்றிற் றன் பெற்ற புதல்வன் மறைப்பக் கெடும்" என்றபடி நமது முன்னோர்கள்பால் ஏதாவது சிறுமையிருப்பினும், அச்சிறுமை நீங்குதற்குப் பெருமை தரத்தக்க வினைகள் செய்யவேண்டியது மக்கள் கடனாகவிருக்க, அவர்கள் தேடி வைத்த அளவிலாப் பெருமைகளை அழிய விட்டுச் சிறுமையைத் தேடிக் கொள்ளலாமோ? நாம் ஒன்றுஞ்செய்யாது நமது முன்னோர்களின் பெருமைகளைப் பேசுதலே பேதமையன்றோ? நாம் செய்யும் செயல் நமது முன்னோர் செயலினும் விழுமிதாக விருந்தாலன்றோ நம்மை உலகம் போற்றும். இவ்வளவு செயற்கரிய செயல் புரிந்து அழியாப் புகழ்படைத்த நமது முன்னோர்களும் மாண்டொழிந்தனர்; நாமும் முடிவில் "மரணம் நிச்சயம்" என்ற ஆன்றோர் வாக்கினின்றும் தப்பித்துக்கொள்ள முடியாது. நம்முடைய ஆயுளுக்குள் நாம் செய்யுங்காரியங்கள் உலகில்நின்றநிலவும். நம் செயல் புகழத்தக்கதாக விருந்தால் நமது பின்னோர்கள் புகழுவார்கள்; இகழத்தக்கதாக விருந்தால் அங்ஙனம் செய்வார்கள். இது உலக வியற்கை தானே. நாம் இப்பொழுது எப்படி நமது முன்னோர்கள் செயலைப் பாராட்டுகிறோமோ அதுபோலவே நமது செயலைப்பொறுத்துத்தானே நம்மையும் சொல்வார்கள். புகழ்ச்சி இகழ்ச்சி ஒருபுறமிருக்க, நாம் செய்த தீவினையின் பயனையும் நாம் அனுபவித்துத் தீரவேண்டுமன்றோ? "அத்தமும் வாழ்வுமகத்து மட்டே, விழியம்பொழுக, மெத்தியமாதரும் வீதிமட்டே, விம்மி விம்மியிரு, கைத்தலமேல் வைத்தழுமைந்தருஞ் சுடுகாடுமட்டே, பற்றித் தொடருமிருவினைப் புண்ணிய பாபமுமே" என்றார் நமது சமூகத்துதித்த பட்டினத்தடிகள் என்னும் சீரிய ஞானி. இதனை உற்று நோக்



குவார்க்கு, பொருள், மனை, மனைவி, மக்கள், சுற்றத்தார் ஆகிய யாவும் அனித்தியம் அவைகட்காக நடுநிலை தவறி ஒரு காரியஞ்செய்தல் ஆகாது. செய்யின் அவ்வினை நம்மை ஒரு நாளும் விடாது; அதன் பயனை அனுபவித்தே தீரவேண்டுமென்பது நன்கு புலனாகும். பொருள் வருவாய்க்காகவும் பிறவாழ்வுக்காகவும் நடுநிலை தவறியொரு காரியஞ் செய்யாதே, "அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே" நீ இறக்குந் தருவாயில், அவை உன்னுடைய வீட்டோடு நின்றுவிடும்; மனைவிக்காக நடுத்தவறி ஒரு காரியஞ்செய்யாதே; "விழியம்பொழுக மெத்திய மாதரும் வீதிமட்டே" அவர் வீதியோடு நின்றுவிடுவர்; மைந்தர்கட்காகத்தீத்துறையிலிறங்கிச் சமூகத்தைப் பாழ்படுத்தும்படியான ஒருகாரியத்தைச் செய்யாதே; "கைத்தலமேல் வைத்தழும் மைந்தரும் சுடுகாடுமட்டே" அவர்கள் சுடுகாடோடு நின்று விடுவார்கள்; நல்வினை தீவினை யோர்ந்து நடுவு நிலைமையோடு கடவுளுக்குப் பயந்துநட, இதிற்றவறுவை யானால் பின்னே அநுபவித்துத்தீரல் வேண்டும்; "பற்றித்தொடரும் இருவினைப் புண்ணியபாவமுமே" என்றார் அப்பெரியார், மனைவி மக்கட்கே நடுநிலை தவறி யொருகாரியஞ் செய்யக்கூடாதென்றால், பங்காளி சுற்றத்தார் முதலியவர்கட்காக நடுவு நிலை தவறி யொருகாரியஞ் செய்வோர் எத்தகைய நரகில் ஆழ்ந்து துன்பப்படுவார்களென்பதை நாம் சொல்லவேண்டுவதில்லை. எது நியாயமோ அதையே செய்யவேண்டுமென்பதையே திரும்பவும் திரும்பவும் நாம் வற்புறுத்தவேண்டியவர்களாகவிருக்கின்றோம். சுருங்கச் சொல்லுமிடத்துத் தங்கள் தங்கள் சந்ததி மேலும் மேலும் விருந்தியாகி என்றென்றைக்கும் இந்நிலவுலகத்தில் குடி தழைத்தோங்க வேண்டும் என்று விரும்பும் ஒவ்வொருவரும் நடுவுநிலைமையில் எள்ளளவும் பிசகுதல் ஆகாது, நடுவு நிலைமையிற் சிறிது தவறுவார்களானால் அவர்கள் குடி சந்ததியற்றுப் போகும் என்பதில் ஒரு சிறிதும்தடையில்லை. "வாரங்கொண்டு வழக்குரைத்து மண்மேனின்று வலிபேசி, ஓரஞ்சொன்ன குடியதுபோல் உதிர்ந்து கிடக்கும் தம்பியரே" என்ற மூதுரை பொய்க்குமோ? இப்பொழுதிருக்கின்ற இடம் பொருளேவலாதிகளால் ஒன்றும் தோன்றாவிடினும் பிறகன்றோ அதுதெரியும்.

## எண்டிசைக் காட்சி.

### கட்டுரை வரைவோர் கவனிக்க!

நமது பத்திரிகைக்குக் கட்டுரை வரைந்தனுப்புவோர் கட்டுரை வரையும் பொழுது மிக நன்றாகக் கவனித்து, சங்கிலிப் பின்னல் எழுத்துக்களில் எழுதாமல், தனித்தனியான எழுத்துக்களில் நல்ல காகிதத்தில் வரிக்குவரி இடம் விட்டு இரண்டு புறங்களிலும் எழுதாமல், மசியினால் எழுதுதல் வேண்டும். அங்ஙனம் எழுதப்படாத விஷயங்களைக் கவனிப்பது மிகவும் சிரம சாத்தியமாக விருக்கிறது. வரிகள் நெருங்க யெழுதியிருக்குமானால் பிழைகளைத் திருத்துதற்கு முடிவதில்லை. இரண்டாவது முறை திரும்ப எழுதவேண்டியதாகிறது. இனிக் கட்டுரை வரைவோர் இவ்விஷயங்களைக் கவனித்து எழுதியனுப்புமாறு வேண்டுகிறோம். அங்ஙனம் எழுதப்படாத விஷயங்கள் கவனிக்கபடமாட்டா. அநேக வியாசங்கள் மிகவும் பிழைபட வருகின்றனவாதலின் அவைகளைப் பிரசுரிக்காமைக்காக அவர்கள் வருந்த மாட்டார்களென்று நம்புகிறோம். வெளியிடக்கூடியதாக விருந்தால் வெளியிட்டு விடுவோம். வெளியிடாத வியாசங்களைத் திரும்பப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று எண்ணுபவர் தபால் பில்லையனுப்பினார்களானால் திரும்பப்பெற்றுக்கொள்ளலாம்.

## உள்ளூர்வர்த்தமானம்.

யூனியன்போர்ட்டார் கவனிக்க:- சில சந்துகளில் விளக்குப் போடாமையால் அவ்விளக்குத் தூண்களில் முட்டிக்கொள்ள நேரிடுகிறது. தெருக்களிற் கொட்டியிருக்கும் சரளைக் கற்களைப் பரப்பாதபடியினால் அவைகளில் இருட்டில் இடறிவிழ நேரிடுகிறது. உபகாரமாயில்லாத போனாலும் அபகாரமாய் இருப்பது மிக வருத்தத்தைத் தருகின்றது. எங்கு பார்த்தாலும் சகதியாகவேயிருக்கிறது. விசேஷக்காரவீடுகளுக்கு எதிரில் எச்சல் இலைகள் அடையானமாகக் கொட்டப்பட்டுச் சந்துகளை யடைத்துக் கொண்டிருக்கின்றன. யூனியன் போர்டார் இவைகளைக்கவனியாது என்ன செய்கின்றனரென்பது விளங்கவில்லை. உடனேகவனித்துத் தங்கள் கடமையைச் செய்வார்களாக!

ராமநாதன் செட்டியார் வழக்கு:— இவர் வழக்கு பிப்பிரவரிமீ கஅஉக்கு ஒத்திவைக்கப்பெற்றிருப்பதாக அறிகிறோம்.

பசலாகிருஷ்ணையர்:—அரசாங்கத்தாரால்கைது செய்யப்பட்டுத் தேவகோட்டைகொண்டு போகப் பெற்ற பசலா கிருஷ்ணையாவர்கள் சிவகெங்கையில் ரிமாண்டில் இருந்து வருகிறார். அவர்வழக்கு நாளைவாயிதா.

## தந்திச் செய்தி.

### பினாங்கு தைமீ கஅஉ

| | |
|---|---|
| மதராஸ் உண்டியல் விலை | நூற்று எழுபத்தைந்து. |
| ஈயம் விலை | எழுபத்தேழு. |
| ரப்பர் விலை | நாற்பது. |

### சைகூன் தைமீ கஅஉ

| | |
|---|---|
| மதராஸ் உண்டியல் விலை | நூற்றுத் தொண்ணூறு. |
| சிங்கப்பூர்வட்டம் | ஒன்பது |

### ரேங்கூன் தைமீ கஅஉ

| | |
|---|---|
| அரிசி விலை | சகO |
| நெல் விலை | கஅ௫ |
| வெள்ளைமொச்சை | உOO |
| சிகப்புமொச்சை | ௩௪O |
| கடலை | சக௫ |
| துவரை | ௬OO |
| பினாங்கு உண்டியல் விலை | கஎச |
| தவணைவட்டி | O—கஙு—க |

பணம் வெகு பிரியம்.

அரிசி பினாங்கு, பம்பாய், கொழும்பு, இந்த பிரதேசங்கட்கு அதிகமாக ஏற்றுமதியாகிக்கொண்டிருக்கிறது

# பொது வர்த்தமானம்.

உலகம்பட்டி:—ஸ்ரீஞானசம்பந்தவாசகசாலையில் நிகழும் துன்மதிஆண்டு தைமதி ரு-ந்தேதிமாலை. ந-மணிக்கு ஸ்ரீமான் சி. லெட்சுமணன் செட்டியாரவர்கள் அக்ராசனத்தில் சபைகூட்டப் பெற்று, கடவுள் வாத்துக் கூறிய பின் பலஅறிஞர்களும். மாணவர்களும், பலஅரிய விஷங்களைச் சொற் பெருக்கிட்டனர். தலைவரவர்கள் விளக்கமாக முடிவுரை நிகழ்த்தினுர்கள் இரவு எ-மணிக்குச்சபை இனிது நிறைவெய்தியது என்று காரியதரிசி எழுதுகிருர்

***

ஆர்ய தர்மம்:- ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஜகத்குரு ஸ்ரீசங்கராச்சாரிய சுவாமிகளின் ஆக்ஞைபின்பேரில் இதுகாறும் ஓர் மாதாந்திர சஞ்சிகையாக வெளிவந்த 'ஆரியதர்மம்' பத்திரிகையானது நாளிது ஜனவரிமீ ககஉ முதல் பிரதி வியாழக்கிழமையிலும் ஓர் வாரப் பத்திரிகையாக கும்பகோணத்திலிருந்து வெளிவரும். ஹிந்துமதத்தைக் காப்பதையும் அதையனுசரித்து நடப்பதையுமே முக்கிய நோககமாகக்கொண்டு அப்பத்திரிகை நடைபெற்றுவரும் என்று ஒரு நிருபர் அறிவிக்கிருர்.

***

திருச்சி:—கொச்சிராஜாஅவர்கள் தமது விருதுகளுடன் உஉ-க-உஉ மாலை சுமணிக்கு இவ்விடம் தாயுமான சுவாமி கோவில் தெரிசனஞ் செய்துகொண்டு உச்சிப் பிள்ளையார் கோவிலுக்கு வந்து மலைமேலிருந்து ஊர்களெல்லாம் பார்வையிட்டு மாலைகள்பெற்று மாலை சுமணிக்கு இவ்விடம் கலெக்டர், ராவ்பகதூர் யூ. ராமாராவ் ஆகியவர்களோடு தமது ஜாகையாகிய புதுக்கோட்டை மகாராஜாபங்களாவுக்குப்போய்ச் சேர்ந்தார்கள். சுமார் ஆயிரத்தி ஐந்நூறு பேர்வரைக்கூடியிருந்தனர். உங-க-உஉ காலை அமணிக்கு கலெக்டரோடும் தமது பரிவாரங்களோடும் மேற்படி ராஜாஅவர்கள் ஸ்ரீரங்கம் ரங்கநாத சுவாமியைத்-தரிசனம் செய்து மேற்படி கோவில் நகைகள் முழுமையும் பார்வையிட்டார்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிருர்.

***

தேவகோட்டையில் பந்திபோஜனம்:—கருங்குளம் நாராயணன் செட்டியார் என்பவர் சிலகாலத்துக்கு முன் ஷெயார்மகனுக்குத்திருக்கார்த்திகைப்புதுமை செய்தபொழுது எல்லாரோடும் வந்து சொக்கப்பன் கொழுத்த எத்தனித்ததில் நகரத்தார்களால் ஷெநாராயணன் செட்டியார் கிரிமினல்ஜெயிலுக்குப்போய்வந்தவரென்று சொல்லி நகரத்தாரோடு சேர்ந்து சொக்கப்பன் கொழுத்தக்கூடாதென்றும்ஊர்ப்பாக்குக்கொடுக்கக்கூடாதென்றும் தண்டற்காரன் மூலம் ஊர் நகரத்தார்களுக்குச் சொல்லியிருக்கிருர்கள்.

அவ்விதமிருக்க, குஞ்சாவடியார் வளவு சொக்கலிங்கஞ் செட்டியார் மகளுக்கும் முக. பெரி. சித. சொக்கலிங்கஞ் செட்டியார் மகனுக்கும் நாளிது தைமீ ருஉ நடந்த கல்யாணத்தில் இரண்டு வீட்டிலும் ஷெ நாராயணன் செட்டியாருடன் பந்திபோஜனம் செய்திருக்கிருர்கள். ஷெவிஷயத்தை நகரத்தார்கள் கவனிக்கும் சமயம் எப்பொழுதோ, என்று தேவகோட்டையிலிருந்து ஓர் நிருபர் எழுதுகிருர்.

***

கொலைமறுத்தற் பிரசாரம்:—நமது நாட்டில் பலிப் பொங்கல் நடைபெறும் இடங்கட்கெல்லாம் சென்று கொலைமறுத்தற் பிரசாரம் செய்யத் தீர்மானித்திருக்கிறோம். எங்கள் முயற்சிக்கு ஆங்காங்கேயுள்ள ஜீவகாருண்ய சீலர்களின் உதவியையும் எதிர் பார்க்கிறோம். உபந்யாசம் புரியக் கூடிய அன்பர்கள் இம் முயற்சியில் கலந்துழைக்க இசைந்து தெரிவிப்பார்களாஞல் ஆங்காங்கே நடைபெறும் பிரசாரத்திற்கு அவர்களை அன்போடு அழைத்துக் கொள்வோம். ஏராளமான துண்டுப் பிரசுரங்கள் அச்சிட்டுப்பரப்புவதும் ஒரு முக்கிய நோக்கமாகும். அதன் பொருட்டுப் பணம் உதவ விரும்பும் அன்பர்கள் அடியிற்கண்ட விலாசத்திற்கு அனுப்பலாம். பணம் உதவுபவர்கள் விரும்புவார்களாஞல் அவர்கள் பொருளுதவி பெற்றது என்று பிரசுரங்களில் குறிப்பிடப்படும். எந்தெந்த ஊர்களில் எந்த மாதம் எந்தத் தேதியில் கிடாய் கோழி அறுக்கிற பொங்கல்கள் நடைபெறகின்றன வென்ற விவரங்களைத் தெரிவிக்குமாறு நண்பர்களை வேண்டிக் கொள்ளுகிறோம்.என்று இவ்வூர்காரைச்சிவனடியார் திருக்கூட்டக் காரியதரிசி அழ. அருணசலஞ்செட்டியார் அறிவிக்கிருர்.

## செட்டி நாடும் இரஸ்தா வசதியும்.

நாட்டுக்கோட்டைபாராகிய நம்மவர்கள் நகரங்களுக்குச் செல்லும் இரஸ்தாக்களின் சீர்கேடான நிலைமைப்பற்றி இப்போது சில வருடகாலமாக நம்மவர்கள் சிறிது கவனம் செலுத்தி அவற்றைச் செப்பனிட முயற்சிகள் செய்து வருவதைப்பற்றி ஒருவாறு நாம் சந்தோஷப்படவேண்டும். ஊருக்கு வெளியே செல்லும் இரஸ்தாக்களும் நல்ல நிலையிலிருக்கப் பார்த்துக் கொள்ள வேண்டும். ரோடுகளை கவர்ன்மெண்டார் கவனிப்பது அப்படியப்படிதான். சுங்கக்கேட்டு வரியை உயர்த்துவதில் மாத்திரம் குறைவு யில்லை. இரஸ்தாக்கள் இருக்கிற கேவல நிலைமை சொல்லத் தரமல்ல. நாட்டுக் கோட்டையார் புதிதாய் ரோட்டுப்போடும்பொழுதுமாத்திரம் பதிஞயிரக்கணக்காகச் செலவு செய்கின்றனர். அதன்பின் அதைக் கவனிப்பதேயில்லை. இது இப்படியிருக்க, ஊருக்குள் வீதிகளின் நிலைமைபோ சொல்லத்தரமல்ல. வீடுகள் மட்டும் அழகாக லட்சக்கணக்கில் செலவுசெய்து கட்டி விடுகிருர்கள். அதற்கு முன்னுள்ள பாதையோ இரவு காலத்தில் தீபமில்லாது போகவர யோக்கியதை இல்லாததாயிருக்கிறது. ஒரு வீட்டுக்கு முன் மேடாயிருந்தால அடுத்த வீட்டுக்கு முன் கெடுபள்ளமாக விருக்கும். இதையாரும் கவனிப்பதே இல்லை. ரோடும் வீதியும் சரியாயிருந்தால் தானே வீடு இலட்சணமாக விருக்கும்? இதுதான் இப்படி என்றால் வீட்டின் பக்கங்களையும், வீதிகளையும், குளக்கரை, கால்வாய், மைதானம் முதலிய இடங்களையும் (கக்கூசாக) மலம் கழிக்கும் இடமாக உபயோகிக்கிறார்கள். இந்த ஆபாசத்தை வெளியிடவே வெட்கமாயிருக்கிறது. சிறு பிள்ளைகள் தாம் தெரியாது இப்படிச்செய்து விடுகிறார்கள் என்பீர்களோ? பெரியவர்களின் நடத்தை அதிலும் மோசமாகவிருக்கிறது. அந்தப் பெரியவர்கள் பரிவாரங்களுடன் லாந்தர்கள் போட்டுக்கொண்டு ஜனப்புளக்கமுள்ள இடத்திலே சகலருமறிய ஆபாசம் செய்கிறார்கள். ஜனங்கள் நடமாடுகிறார்களே! பெண்கள் வருகிறார்களே!! என்று கவனிப்பதில்லை. அப்பொழுது தான் அவர்களுக்குள் பெரிய பெரிய பேச்சுகள். கொலையிலிருந்து வந்த கடிதத்தைப் பற்றிய நாட்டம். கோர்ட்டிலே வக்கீல் காட்டின சமர்த்து, அடுத்த வீட்டுக்காரர் புரணி முதலான பல ரசமான விஷயங்கள் பேசப்படுகின்றன. இந்த நிலைமை சீக்கிரம் மாறுதல் அடையவேண்டும். இதனால் தான் செட்டி நாட்டில் ஊர்தோறும் பலவிததொத்துநோய்கள் பரவி மரண சங்கையை அதிகரித்து வருகின்றது.

மகாத்மா காந்தி அவர்கள் சமீபத்தில் செட்டி நாட்டிற்கு விஜயம் செய்தபொழுது செட்டி நாடு தர்மத்தில் சிறந்ததாயினும், தனவைசியர் தங்கள் சொந்தக் காரியம் பார்ப்பதில் இவ்வளவு தூரம்தான் சமர்த்தர் என்று ஒருவாறாய் நிதானித்திருப்பர். இரஸ்தாக்களின்நிலைமையிலிருந்தே அந்தப் பிரதேசத்தாரின் முயற்சியை அறிந்து கொள்ளலாம். செட்டி நாட்டிலே மோட்டார் பிரபுக்கள் ஜாஸ்தியாயினும் ரோடுகளைக் கவனிப்பாரில்லை. புதுக்கோட்டையிலிருந்து திருமெய்யம்மார்க்கமாய் மோட்டார் மூலமாய் வரும் தபால்கள் காலந்தவறாமல் வருவதில்லை. அப்படி மோட்டாரில் வருவதும் ஓய்ந்துவிட்டன. அன்னிய தேசங்களில் நாம் மிகவும் பிரபலமாய் வியாபாரம் செய்து வருகிறோம். ஆனால் நாம் இருக்கும் ஊர்களுக்குத்தபால் வசதி ஏற்படுத்திக்கொள்ள நம்மால் முடியாததென்ன? சட்ட சபைகளிலும் இராஜாங்கசபைகளிலும் நம்மவர்கள் அங்கத்தவர்களாவிருந்து கவர்ன்மெண்டாரோடு ஒத்துழைத்தும்பிரயோஜனம்என்ன? கவர்ன்மெண்டின் தயவுக்குக் காத்திருக்கும் பிரபுக்கள் தங்கள் தேச நன்மையை உடனே கவனிப்பார்களாக!

சு. பழநியப்பா.



# மாதர் பகுதி.

## ஆபரணம் அணிதல்.

லோகத்திலே எந்த ஜாதியிலும் எந்தமதத்திலும்பெண்களாய்ப் பிறந்தவர்கள், ஆபரணமணிதல்இயல் பாகவே யிருக்கிறது. பெண்கள் ஆபரணமணிய வேண்டுவது மவசியமேயாகும். இப்பொழுது நமது சமூகத்தை யெடுத்துக்கொள்வோம். இந்த விஷயத்தில் நமது பெண்களைத் தோற்கடிக்க வேறு எந்தநாட்டுப் பெண்களாலும் எந்த சமூகத்துப் பெண்களாலும் முடியாதென்பதை நாம் சொல்லித் தெரிந்துகொள்ள வேண்டுவதில்லை. கல்வி முதலிய அறிவுடையார் விரும்பும் விஷயங்களில் ஒரு சிறிதும் நமது பெண்கள் பயிற்சி யற்றவர்களாக விருப்பினும், நகையின் மாதிரி மிக மிக அழகாகச் சொல்லுவார்கள். ஆனல், பெரும்பாலோர்க்குப் பெண்கட்குரிய குணஞ்செயல்கள் பெரும் பான்மையும் இல்லாமை கருதி, அவர்கள் நகையே அணியக்கூடாதென்று இப்பொழுது நாம்சொல்லவரவில்லை. ஏதோ மற்ற பெண்களைப்போல இவர்களும் நகையணிந்து கொள்ளட்டும். நகையணியும் விஷயத்தில கவனிக்க வேண்டியவைகள் பலப்பலவுள.

முதலில் நகையிட்டுக் கொள்ளுதல் எதற்காக வென்பதை நன்ருக யோஜித்தல் வேண்டும். நகையணிதல் அழகிற்காக என்றுதானே கூற முடியும். மாங்கல்யத்தை விட்டு விடுவோம். அது அழகிற்காக அணியும் ஓர் ஆபரணமல்லவே; நமது ஹிந்து சாஸ்திரப்பிரகாரம் விவாகம் செய்து கொண்டதற் கடையாளமாகத் தரிக்கப்பெறுவதல்லவா அது. அதை ஆபரணவரையிற் சேர்க்கப்படாது; மற்ற ஆபரணங்கள் வேண்டுமானல் அணிந்துகொள்ளலாம்; இல்லா விட்டால் சும்மா விருந்துவிடலாம். பணமுள்ளவர் அணியலாம்; இல்லாதவர் அணியவேண்டாம்; இது அப்படியல்லவே, நிச்சயமாக ஏழையாயினும் செல்வராயினும் விவாகஞ் செய்து கொண்டவர்கள் இன்றியமையாது அணிந்து தீர வேண்டிய ஓர் அடையாளமல்லவா? அது இப்பொழுது நடைமுறையில் மிகவும் தவருக அணியப்படுகிறது; அதைப்பற்றி மேலேசொல்லுவோம். இப்பொழுது ஆபரணமணிதல் அழகிற்காக வென்பது கிடைக்கின்றது. அப்படி அழகுபடுத்திக்கொள்ளத்தான பெண்கள் நமது சமூகத்தில் ஆபரணமணிகின்றனர் என்றுபார்த்தால்அந்நணம் காணவில்லை. சுத்தமாக கண்ணுக்கு நன்ருக விருக்கக்கூடிய சிறு பொருள்களாக ஒரு சில ஆபரணங்களை அணிந்தால் அழகாக விருக்கும். தங்களிடத்தில் பொருளுடைமை கருதி வீணே தங்கத்தையும் கற்களையும் வாங்கி, தட்டார்களுக்கும் தங்கள் ஆபரணவிலையில் பாதி கூலி யென்று கொடுத்து இன்னின்ன இடங்களில்தான் நகைபோடுவதென்று இல்லாமல், ஈஸ்ரவன் நகை அணிவதற்கென்று இயற்கையில் அமைத்த இடங்களும்போக, எஞ்சியுள்ள காது மூக்கு முதலியவைகளிலும் ராமபாணம் துளைத்தது போல துவாரங்கள் போட்டு நகைகளைப் போடுதல் அழகாகுமோ? அநேகர் வரிசை வரிசையாகத்தூக்க முடிந்தமட்டும் நகைகளைச் சுமந்து கொண்டுவரும் பொழுது அவலக்ஷணமாகத் தோன்றவில்லையா? கையிற் காப்புப் போடுவதென்றால், எத்தனை வரிசைதாம் போடலாம்? காதில் எத்தனை துவாரம்போடலாம்? மூக்கில் எத்தனை துவாரம்? (கண்ணைத் துளைக்க இன்னும் முற்படவில்லை; இப்பொழுது போய்க் கொண்டிருக்கிற முறையிற் போனல் இன்னும் கொஞ்சக்காலத்தில் கண்ணைத் துளைக்கவும் முற்பட்டு விடுவார்கள்) கழுத்தில் எவ்வளவுபாரம்? இவர்களைப் பார்க்கும் பொழுது இரக்கசித்தமுடையோர்க்கு மிகவும் பரிதாபமாக விருக்கிறது. அவர்கள் கல்வியில்லாக் குறைவால் தங்கள் தேகத்துக் கஷ்டத்தைத் தேடிக் கொண்டபோழ்திலும்,அவர்கள் நம்முடைய சமூகத்திற் பிறக்கவில்லையா? நம்முடைய தங்கை தமக்கை மனைவி முதலிய சுற்றத்தார்களல்லவா? நமக்குச் சிறிதளவேனும் ஜீவகாருண்யம் வேண்டாமா? ஆடவர்களாகிய நாம் அவர்களுடைய சிரமத்தை நீக்க வேண்டாமோ? அவர்களென்ன சுமை தாங்கிக்கற்களா? அவர்களும்நம்மைப்போல் மக்களேயன்றோ? நாமாவது சொல்லித்திருத்தி அவர்களுடைய பாரத்தைக்குறைக்க முயற்சிக்க வேண்டும். சொற்ப நகைகளை வேண்டுமிடத்துஅணிதல்தான் அழகு 'பெண் ஜன்மம்பாபம் செய்தது' என்று எங்கோ சிலர் சொல்லுகிறார்களே; ஒருகால் பாபம் செய்யாவிட்டால் இவ்வளவு நகைகளைச் சுமந்து கஷ்டப்படமாட்டார்களாகையினலே பாபம் செய்துதான் இருப்பார்கள் என்று எண்ணித்தான் சொல்லுகின்றார்களோ என்னவோ? அதுஇருக்கட்டும். முற்காலத்தைப்போல மண்ணுருண்டைகளையுருட்டி அதன்மேல் தங்கத் தகட்டைப் போட்டும் இன்னும் சாதாரண பல முள்ளவர்கள் அநேகரால் தூக்கமுடியாத படியும்உள்ள நகைகளை இப்பொழுது விட்டுவிட்டோம். அதுசாலச் சிறந்ததே எனினும் இப்பொழுதைய நகையில் நமது சமூகப்பணத்தை வயிர வியாபாரிகளும் மற்றவர்களும் தட்டார்களும் கொள்ளை கொள்ளையாகக்கொண்டு போகிருர்கள். சிந்நாட்கட்கு முன் ஒன்றுமில்லாது திரிந்த அநேகர் வைர வியாபாரஞ்செய்து லட்சாதிபதியாகிவிட்டனர். அவர்களைப்பற்றி நமக்குக்கவலையில்லை. நம்முடைய பணங்களை நாம் வீணில் விரையஞ்செய்யக் கூடாதன்ருே? ஆனல் நம்முடைய சமூகத்துப் பெண்களைக்காட்டிலும் வேறு சில பெண்கள் இன்னும் மிக மிக விநோதமான நகைகளெல்லாம் அணிகின்றனர். அவர்களை நாம் விட்டு விடுவோம். உயர்ந்த நிலையிலுள்ளவர்களை நாம் பார்ப்போம். வேறு பல விஷயங்களில் எப்படியிருந்த போழ்தினும் இந்த விஷயத்தில் ஆங்கிலேயரை நாம் எடுத்துச் சொல்லாதிருக்க முடியவில்லை. எவ்வளவு கோடீஸ்பரராக விருந்தபோழ்திலும் அளவுக்கு மிஞ்சி ஆபரணமணிய மாட்டார்கள். மிகக் கணக்காகவே அணிவார்கள். நகையதிகம் அணியாததற்காகப் பார்வைக்குக் குறைவாக அவர்கள் காணப்படவில்லை. நமது பெண்கள்கூட, இருப்புப்பாதைத்தொடர் முதலிய இடங்களிலே ஆங்கிலேயப் பெண்களைக் கண்டு அவர்களின் ஆடையணிகளைப் பாராட்டுவதை நாம் பார்க்கின்றோம். நகை அணிவதை விட்டு விட்டு ஆடை அணிவதில் திரும்புவார்களானல், மிக அழகாக விருக்குமென்பதிலையமில்லை. ஆடை அணிவதென்ருல் ஆயிரம் இரண்டாயிரங்கட்குப்பட்டு வாங்கிக்கட்டுவதல்ல. வேண்டுமளவு வாங்கி உடுக்கும் விதத்தாலுடுக்க வேண்டும். இதைப்பின்னொரு சமயம் பார்த்துக் கொள்வோம். செல்வராயினும் சரியே, வறிய ராயினும் சரியே, நகையை அதிகமாக அணிதல் மிகவும்பொருத்தமற்றகாரியம. நிற்க, நமது சமூகத்தில் செல்வர் செய்யுங்காரியத்தில் ஒருசிறிதுங் குறையில்லாது வறியருஞ்செய்ய எண்ணுகின்றனர். இதுஎவ்வளவு அறியாமையாகும். அப்படி அநாகரீகமாக அணிவதாகவிருந்தாலும்,அவரவர்சக்திக்கேற்பவன்ருே அணிதல் வேண்டும். சிற் சில்விஷயங்களில் மக்களெல்லாரும் ஒரேபடி; உடைமை கருதி சில சில விஷயங்களில் வேறுபாடுயிருக்கத்தான் செய்யும்; அதுஅவரவருடைய கருமத்திற்குத் தக்கதாகும். ஒரு சமூகத்தில் ஒரே நிலையிலுள்ள ஆண் மாக்களையே படைக்க முடியுமா? அதுகூடுமானல், எல்லோரும்எந்தக்காரியத்தைச் செய்தாலும் ஒரேமாதிரியாகச்செய்யலாம்.லட்சரூபாய்உள்ளவர்பதிஞயிரத்திற்கு நகைசெய்தாரானல், க000-உள்ளவர்முதல்முழுமையும் நகையிற் போடமுடியுமோ? அதற்கும் குறைவாக வுள்ளவர்கடன்வாங்கி நகைசெய்ய முடியுமோ? நமது பெண்கள் அநேகருக்கு அது தெரிவதில்லை. யாராவதொன்று அணிந்தால் அது தனக்கு வேண்டும்

அதுஇல்லா திருத்தல் பெருங்குறை யென்று எண்ணுகின்றனர். இதைக் காட்டிலும் அறியாமை யென்பது வேறென்றிருக்கின்றதோ? நகை யணிபவர்உயர்ந்தவர்என்று சிலர் எண்ணுகின்றனர். இந்த எண்ணமடியோடுதொலையவேண்டும். உயர்வு தாழ்வு நகையணிவதிலில்லை. அதுவேறுவிஷயம்; இதுவேறுவிஷயம். பணமுடையோர் உயர்ந்தவரென்பதுபோல விருக்கிறது இது. "இதுஉடைமை உயர்ந்தது; இது உடைமை தாழ்ந்தது" என்பதை அறிந்த வன்று தான் சமூகம் புனிதமடையும். இரண்டு ஜதைக்குக் குறை வாக நகை வைத்திருப்பவர்கள் நமது சமூகத்தில் அரிது. இன்னும்விசேடங்களில் பெரு நகைகள் இரவல்|வாங்கியாவது போட்டுத் தீரவேண்டுமென்பது ஒரு சடங்காக ஆகிவிட்டது. இரவல் மாங்காய் மாலையாவதுகழுத்தில் ஏறுவிட்டால், மாங்கல்யம்கழுத்தில் ஏறுது, இவைகளெல்லாம் எழுதமுடியாத அநாகரீகச்செயலல்லவா?

ஸ்ரீ திருமாங்கல்யத்தை மற்றவர்கள் பார்க்கக்கூடாதல்லவா? அதையும் நகைவகையிற் சேர்த்து கற்களை இழைத்துக் கண்டவர்கள் கண்களைக்கவரும்படி செய்து கொள்ளுதல் கற்புடைய மங்கையர்க்கழகாகுமோ? மற்றநகை விஷயங்களைப்பிறகு பார்த்துக் கொள்ளுவதென்றாலும், இம்மியுந்தாழாது மாங்கல்யத்தைத்திருத்தியமைத்துக் கொள்ளுதல் அவசியத்திலும் அவசியமாகும்.

நமது பெண்களின் நகை விஷயமாக எழுதவேண்டியவைகள் இன்னும் பலபடக்கிடக்கின்றன வென்றாலும், இக்கட்டுரை நீட்டித்துவிட்டமை கருதி இன்று இம்மட்டோடு விடுக்கின்றோம். பின்னொரு சமயம்பார்த்துக் கொள்வோம்.

---

வலையபட்டி
தனவைசிய சிகாமணிகளுக்கு
## ஓர் வேண்டுகோள்.

---

அன்பார்ந்த சகோதரர்களே!

நம் ஜாதியபிமானங்கொண்டு சமூகம் முன்னேறவேண்டித் தன்னலங் கருதாமலும் இகழ்ச்சி புகழ்ச்சிகளை விரும்பாமலும் நம்மவர்வசிக்கும் ஊர்கள் தோறும் பிரசாரம்செய்து மகாநாட்டைக்கூட்டித் தாங்கள் எடுத்த கோரிக்கையை நிறைவேற்றி வைத்து மகிழ்வித்த சமூக ஊழியர்சங்கத்தாருக்கு நாமெல்லோரும் நன்றி பாராட்டக்கடமைப்பட்டிருக்கிறோம். இனி ஊழியர் சங்கத்தாருக்கு ஒத்தாசையாகவும் ஆங்காங்குள்ள விஷயங்களைச் சங்கத்தார்தெரிந்து கொள்ளும் பொருட்டாகவும் ஒவ்வொரு ஊரிலும் வாலிபர் சங்கங்களுண்டாகி மிகவும் ஊக்கத்தோடு ஒற்றுமையாக நடைபெற்று வருவது யாவரும் அறிந்த விஷயம். மேலைவட்டகையிற் பெரியஊராகிய நம்மூரில் இன்னும் வாலிபர்சங்கம் ஏற்படுத்தாதிருக்கலாமா? அநேகம்சின்னஊர்களிற்கூடவாலிபர் சங்கங்கள் ஏற்பட்டுதீவிரமாகவேலை செய்து வருகின்றனவே. நான் முன் ஒருமுறை வாலிபர் சங்கம் ஸ்தாபிக்க அறிவாளிகள் முன்வர வேண்டுமென்பதாக ஊழியன் வாயிலாய் உ-கூ-உகல் வேண்டிக்கொண்டு எழுதியும் நமது வாலிபச் சகோதரர்கள் ஒருவரும் கவனியாமலிருப்பது விசனிக்கதக்கதேயாகும். நமது சமூகத்திற்கு வாலிபர்சங்கம் ஏற்படவேண்டியதவசியமாகும்; ஆகையால் இனியும் தாமதியாது கூடிய சீக்கிரம் நமது ஊரில் வாலிபர்சங்கம் ஸ்தாபித்துஊழியனோடுஒத்துழைக்குமாறு மலையாண்டி ஸ்வாமி அருள் புரிவாராக.

ராம. ப. அ. காசிவிஸ்வநாதன்,
வலையபட்டி.

---

தொண்ணூற்றுநார்க் கூட்டமும்
பெண்ணுக்குப் பணம் வாங்கும்
## தீர்மானமும்.

---

ஸ்ரீ நடைபெற்ற|கூட்டத்தில் "பெண்ணுக்குபணம் வாங்கக்கூடாது; கல்யாணச் செலவுக்கு ரூ. ௫00க்குள் வாங்கிக் கொள்ளுகிறது" என்று தீர்மானம் ஆகியிருப்பதை சில பேராசை கொண்ட பெற்றோர்கள் அடுத்தகூட்டத்தில் அதிகமாகத் தொகை வைத்துவிடலாம்; அல்லது வேறுயாராவது கட்டுக்குமீறி நடந்தால் தாங்களும் நடக்கலாம்; என்று பெண்கள் ருதுவாகி ஐந்து ஆறுவருஷங்கள் ஆகப் பெற்றவர்கள் கூட எண்ணிக் கொண்டு இருக்கிறார்கள். பெண்களினுடைய பருவகாலங் கடந்து மணஞ் செய்விப்பது கொடும் பாவம். பருவகாலம் கடந்து மணவினை செய்யப்படும் பெண்ணுக்கும் வாடிய பின் அணியும் புஷ்பத்திற்கும் வித்தியாசம் ஒன்றும் இலது. இதை நினையாது பெற்றோர்கள் பணம் ஒன்றிலேயே குறியாயிருக்கிறார்களே தவிர, பெண்களினுடைய சுகா சுகத்தைக் கவனிப்பதே யில்லை. பக்குவமான பெண்ணை ஒரு தகப்பன் மணவினை செய்து கொடுக்காது வைத்துக்கொண்டிருப்பானானால் அவன் குலத்துக்கதைவிடக்கொடியபாவம்வேறில்லை. நம்முடையசமூகத்தில்ருதுவாகியபெண்கள்மிகுதியுமிருக்கிறார்கள். இதுவரைக் கல்யாணம் செய்யபட்டிருக்கும் பக்ஷத்தில், ஒவ்வொரு பெண்ணும் இரண்டு மூன்று பிள்ளைகளுக்குத் தாயாகி இருக்கலாம்.

ஆகையால் மேற்படி காரியங்களை உத்தேசித்து, "பெண்கள் ருதுவாகு முன் கல்யாணம் செய்து விடுறது அல்லது ருதுவாகி ஒரு வருஷம் இரண்டு வருஷங்கட்குள் கல்யாணம் செய்து விடுகிறது; அதற்கு மேல் வைத்திருப்பார்களானால் அவர்களை ஜாதியை விட்டு நீக்கி விடுகிறது" என்று, நடைபெறப்போகும் தொண்ணூற்றுநார்க்கூட்டத்தில் தீர்மானம் செய்து விட்டால் அவ்வாறு பெண்கள் வைத்துக் கொண்டிருப்பவர்களும் மற்றவர்களும் சீக்கிரம் கல்யாணம் செய்துவிடுவார்கள். கல்யாணமாகாத வாலிப சகோதரர்களும் அதிகம் இருக்கமாட்டார்கள். சந்ததிகளும் சீக்கிரம் விர்த்தியாகும் பெண்கள் அகப்படவில்லை என்ற குறையும் நீங்கும். ஆகையினால், நமது ஜாதி அபிமானிகள் ஒவ்வொருவரும் மேற்கண்ட காரணங்களை ஆழ்ந்து யோஜித்து நடைபெறப்போகும் கூட்டத்தில் உறுதியான தீர்மானம் செய்யுமாறும் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைப் பத்திரிகைக்கு யெழுதுமாறும் கேட்டுக் கொள்ளுகிறேன். பத்திரிகையில் ஒவ்வொரு விஷயமும வந்தால் தான் பொதுஜனங்களுக்கு நன்கு தெரியும.

பாலபாஸ்கரன்.

---



## நோட்டீஸ்.

---

திருப்பரங்குன்றம் கிரிப்பிரகாரம் வடக்கு வீதியில் மேல்பக்கத்தில் ரயில்வே ஸ்டேஷனுக்கு சமீபமாக இதன் கீழ்கையொப்பம் வைத்திருப்பவர்களாலும் மற்ற அபிமானிகளாலும் ரூ(எகூ) ஏழாயிரம்வரை பணம் சேகரித்து சுவாமி தெரிசனைக்கு வருபவர்கள் தங்குவதற்காகவும் தண்ணீர்ப்பந்தல் வைப்பதற்காகவும் சார்த்திகை அன்று சாதுக்களுக்கு அன்னம் அளிப்பதற்காகவும் இப்பொழுது ஷெ மடத்தில் வசித்துவருகிற காசிச்சாமி யென்று பேர் விளங்கிய சாந்தலிங்கசுவாமி யார் பேருக்கு இடத்தை கிரயம் வாங்கி பி. நா. கண. நாராயணஞ் செட்டியாரே யிருந்து மடமும் கட்டி கிரகப்பிரவேசமும் செய்து மேல் கண்ட சாந்தலிங்கசுவாமியாரை அம்மடத்திற்கு மேல் பார்த்துவரும்படி நியமித்து மேலே கண்ட தருமங்கள் பலராலும் சுமார் ஏழு வருஷகாலமாக நடந்துவருவதில் தற்காலம் ஷெ சுவாமியார் ஏதோ|கெட்ட எண்ணத்தோடு ஷெ மடத்தைத்தான் தம்முடைய சுவாதீனப்படுத்தி விலைக்கி விற்று ஷெ பணத்தைத்தமது சொந்த உபயோகத்திற்கு எடுத்துக் கொள்ளவேணுமென்று நினைத்து மேலேகண்ட தர்மங்களை நடத்தி விடாமல் தடுத்தும் கிரயத்துக்கு விற்றுவிட விலையும் பேசுவதாக வெளியாகிறது. ஆகையால் மேற்கண்ட மடம் ஷெ சாந்தலிங்கசுவாமியாருக்கு பாத்தியமில்லையென்பதையும் வழக்கம்போல் மேற்கண்ட தருமங்கள் எப்பொழுதும் ஷெ மடத்தில்நடந்துவரவேணுமென்பதையும் தர்மவிரோதமாய் ஷெ சாமியார் விற்க நினைத்தாலும் யாரும் வாங்கக்கூடாதென்பதையும் வாங்கினால் ஷெ கிரயம் செல்லத்தக்கதில்லையென்பதையும் இதன் மூலம் அறிவித்திருக்கிறோம்.

பி. அ. நாராயணன் செட்டியார்
பி.கா.லெ.வெ.லெட்சுமணன் செட்டியார்
பி. கா. கண. நாராயணஞ் செட்டியார்
பி. கா. ராம. நாராயணஞ் செட்டியார்
சி. வெ. சி. சின்னஞ் செட்டியார்
பி. அரு. பி. நாராயணஞ் செட்டியார்
பி. கா. பி. ராம. ராமசாமி செட்டியார்

அலவாக்கோட்டை.
மதகுபட்டி போஸ்ட்டு

---



---

## தனவைசிய ஊழியன், சந்தா விபரம்.

இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு ஞூ ஒன்றுக்கு ... ௩—0—௦
சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்குஞூஒன்றுக்கு ௪—0—0
தனிப்பிரதி ஒன்றுக்கு ... 0—௨—0

### விளம்பர விபரம்.

மாதம் ௧-க்குபத்தி-௧-க்கு ...௨0—0—0
ஷெ அரைப்பத்திக்கு... ௧௧—0—0

மானேஜர்,
தனவைசிய ஊழியன் ஆபீஸ்,
காரைக்குடி.

---

சொ. முருகப்பசெட்டியாரவர்களால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில்
அச்சியற்றிப் பிரசுரஞ் செய்யப்பெற்றது.

